பெரியபுராணம் ஆரம்பம்

உ

ஓம் குஹாய நம:

# திருப்புகழமிர்தம்



"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் முள்போற்றும்
திருப்புகழைக் கேளீர் தினம்"

| மலர் ௰க. Vol 11 | விய ஸு ஐப்பசி மீ 1௳, அக்டோபர் 1946 | இதழ் எ. No 7. |
|---|---|---|

## திருப்புகழ்.

### வயிரவிவனம்.

அருவரை யெடுத்த வீர னெரிபட விரற்க ளூனு
மரனிட மிருக்கு மாயி யருள்வோனே—
அலைகட லடைத்த ராமன் மிகமன மகிழ்ச்சி கூரு
மணிமயில் நடத்து மாசை மருகோனே;
பருதியி னொளிக்கண் வீறும் அறுமுக நிரைத்த தோள்ப
னிருகர மிகுத்த பார முருகாநின்—
பதமல ருளத்தி னூளும் நினைவுறு கருத்தர் தாள்கள்
பணியவு மெனக்கு ஞானம் அருள்வாயே;
சுருதிக ளுரைத்த வேத னுரைமொழி தனக்கு ளாதி
சொலுவென வுரைத்த ஞான குருநாதா—
சுரர்பதி தழைத்து வாழ அமர்சிறை யனைத்து மீள
துணிபட அரக்கர் மாள விடும்வேலா;
மருமலர் மணக்கும் வாச நிறைதரு தருக்கள் சூழும்
வயல்புடை கிடக்கு நீல மலர்வாவி—
வளமுறு தடத்தி னூடு ச்ரஸ்வதி நதிக்கண் வீறு
வயிரவி வனத்தில் மேவு பெருமாளே.

XI 17

## பதவுரை.

அருவரை எடுத்த வீரன் – அருமையான திருக்கைலாய மலையைப் பேர்த்து எடுத்த வீரனாகிய இராவணன், நெரிபட – உடல் நெரிந்து வருந்த, விரல்கள் ஊனும் – திருவடிவிரல்களைச் சிறிது ஊன்றிய, அரன் இடம் இருக்கும் ஆயி – சிவபெருமானுடைய இடப்புறத்தில் வீற்றிருக்கும் அம்மையாகிய உமாதேவியார், அருள் சேயே – பெற்றருளிய திருக்குமாரரே! அலைகடல் அடைத்த ராமன் – அலைகள் நிறைந்த கடலை அணையிட்டுத் தடுத்த ஸ்ரீராமச் சந்திரர், மிக மனம் மகிழ்ச்சி கூரும் – மிகவும் உள்ளம் உவகையுறுகின்ற, அணி மயில் நடத்தும் – அழகிய மயிலை நடாத்துகின்ற, ஆசை மருகோனே – அன்பு நிறைந்த மருகரே! பருதியின் ஒளிக்கண் வீறும் – கதிரவனைப்போல் ஒளிசெய்து பெருமை மிகுந்த, அறுமுக – ஆறு முகங்களை யுடையவரே! நிரைத்த தோள் பன்னிரு கர – வரிசையாக உள்ள தோள்களுடன் கூடிய பன்னிரு கரங்களை யுடையவரே! மிகுத்தபார – ஆன்மகோடிகளைக் காப்பாற்றுவதில் மிகுந்த பொறுப்பை யுடையவரே! முருகா – முருகப் பெருமானே! சுருதிகள் உரைத்த வேதன் – வேதங்களைக் கூறிய பிரமதேவர், உரை மொழி தனக்குள் – உரைக்கத் தொடங்கிய சொற்களுக்குள்ளே, ஆதி – முதல் எழுத்தாகிய பிரணவ மந்திரத்தின் உட்பொருளை, சொலு என உரைத்த – சொல்லக் கடவாய் என்று கேட்டருளிய, ஞான குருநாதா – அறிவு வடிவாகிய ஆசாரிய மூர்த்தியே! சுரர்பதி தழைத்து வாழ – தேவர்கோமான் (பொன்னுலகத்தில்) நலமுற்று வாழவும், அமர் சிறை அனைத்து மீள – தேவர்கள் சிறை யாவும் மீண்டு உய்யவும், துணிபட அரக்கர் மாள – அசுரர்கள் துணிபட்டு மாண்டு ஒழியவும், விடும்வேலா – விடுத்த வேலாயுதத்தை யுடையவரே! மருமலர் மணக்கும் – நல்ல பரிமள மிக்க பூக்கள் நிறைந்து கமழ்கின்ற, வாசம் நிறை தரு – வாசனை நிறைந்த, தருக்கள் சூழும் – மரங்கள் சூழ்ந்த, வயல் புடை கிடக்கும் – வயல்களுக்கு அருகில் கிடக்கின்ற, நீல மலர் வாவி – நீலோற்பல மலர்கள் நிறைந்த குளங்களும், வளம் உறு தடத்தினோடு – வளமை மிக்க தடாகங்களும் சூழ, சரஸ்வதி நதிக்கண் வீறு – சரஸ்வதி நதியின் அருகில் பெருமை தங்கிய, வயிரவி வனத்தில் மேவு – வயிரவிவனத்தில் எழுந்தருளியுள்ள, பெருமாளே – பெருமையின் மிக்கவரே! நின் பதமலர் தேவரீருடைய திருவடிக் கமலங்களை, உளத்தில் நாளும் நினைவுறு கருத்தர் – உள்ளக் கமலத்தில் இடையறாது சிந்திக்கின்ற மெய்யடியார்களுடைய, தாள்கள் – திருவடிகளை, பணியவும் – (அவர்களை உள்ளத்தால் மதிப்பதோடு உடம்பினால்) பணியுமாறும், எனக்கு ஞானம் – அடியேனுக்கு நல்ல அறிவை, அருள்வாயே – அருள்புரிவீர்.



## பொழிப்புரை.

அருமையாகிய திருக்கயிலைமலையைப் பேர்த்து எடுத்த இராவணனது உடம்பு நெரிந்து வருந்த திருவடியில் விரலைச் சிறிது ஊன்றியருளிய சிவபெருமானுடைய இடப்புறத்தில் வீற்றிருக்கும் உமையம்மையாரது புதல்வரே! அலைகள் மிகுந்த கடலை அணை கட்டிய ராகவர் மிகவும் மனமகிழுமாறு அழகிய மயிலை நடாத்துகின்ற அன்புடைய திருமருகரே! கதிரவனைப்போல் ஒளிசெய்யும் பெருமைமிக்க ஆறு திருமுகங்களை யுடையவரே! வரிசையாக விளங்குகின்ற புயங்களுடன் கூடிய பன்னிரு திருக்கரங்களை யுடையவரே! உயிர்களை உய்விக்கும் முருகக் கடவுளே! வேதங்களைச் சொன்ன பிரமதேவர் கூறவந்த வேத மொழிகளுக்குள் முதன்மொழியாகிய பிரணவத்தின் உட்பொருளைச் சொல்லுமாறு கட்டளையிட்ட மெய்ஞ்ஞான குருநாதரே! தேவேந்திரன் தனது பொன்னுலகில் இன்புற்று வாழவும், அமரர் அனைவரும் சிறையினின்று மீளவும், அரக்கர் துணிபட்டு மாண்டு ஒழியவும், விடுத்த வேற்படையை யுடையவரே! நல்ல பரிமள மிக்க மலர்கள் நறுமணங் கமழ்கின்ற பூமரங்கள் சூழ்ந்துள்ள வயல்களுக்கு அருகில், நீலோற்பலமலர் நிறைந்த வாவிகளும், வளமைமிக்க தடாகங்களும் நிறைந்ததும், சரஸ்வதி நதிக்கரையில் விளங்குவதுமாகிய வயிரவிவனத்தில் எழுந்தருளியுள்ள பெருமிதமுடையவரே! தேவரீருடைய திருவடிமலரை இடையறாது உள்ளத்தில் சிந்திக்கும் திருவுடையவர்களாகிய மெய்யடியார்களது அடிமலரை அடியேன் சிந்திக்கவும் வந்திக்கவும் நல்ல அறிவைத் தந்து அருள்புரிவீர்.

## விரிவுரை.

அருவரை யெடுத்த வீரன் ... ......அரன்:—

### இராவணன் கைலைமலை எடுத்தது.

புலத்தியருடைய புதல்வர் விச்ரவசு; விச்ரவசுவுக்கு கேகசி என்பாளிடம் பிறந்தவன் தசக்ரீவன். இவன் இலங்கையைக் குபேரனிடமிருந்து கைப்பற்றிக் கொண்டனன். ஒருசமயம் தசக்ரீவன் குபேரனிடமிருந்து கவர்ந்து

கொண்ட புஷ்பகவிமானத்திலூர்ந்து விண்வழியே வடதிசைநோக்கிச் சென்றனன். ஆங்கு திருக்கைலாய மலை எதிர்ப்பட்டது. அதற்குமேல் விமானம் செல்லாது தடைபட்டது. பலகாலும் செல்லுமாறு விமானத்தைத் தசக்ரீவன் ஏவினன். ஆங்கு கைலாயமலையைக் காவல் புரிந்து கொண்டிருந்த திருநந்திதேவர் "தசக்ரீவா! இதுமுழுமுதற் கடவுளாகிய முக்கட்பெருமான் எழுந்தருளிய திருமலை. இதன்மேல் விமானம் பறந்து செல்லாது; வலமாகச் செல்லுதி" என்று கூறினர். அதுகேட்ட தசக்ரீவன் நகைத்து "மாட்டுமுகமுடைய நீ எனக்கு அறிவு கூறவந்தனையோ? குரங்குபோன்ற உன்னை யார் கேட்டது?" என்று பரிகசித்தனன். திருநந்திதேவர் சினமெய்தி, "மூடனே! ஆணவமலத்தால் மூடப்பட்ட உனக்கு நல்லோர்கள் கூறும் அறவுரை ஏறுது. என்னைக் குரங்கென்று இகழ்ந்ததனல் குரங்கினல் உனது இலங்கையும் அசுரர்களும் அழியக்கடவது" என்று சபித்தனர். தசக்ரீவன் சினந்து "இந்த மலையையும் உன்னையும் உனது தலைவராக இம்மலைமேலுறையும் சிவமூர்த்தியையும் எடுத்து கடலில் எறிவேன்" என்றுகூறி விமானத்தினின்றும் இறங்கி, வெள்ளியங்கிரியை வேருடன் பறித்து தோள்மட்டம் அளவு எடுத்து ஆர்த்தனன். மலை யசைவதைக் கண்டு மலையரையனீன்ற மரகதவல்லி "பெருமானே! ஏன் மலை அசைகின்றது?" என்று வினவினர். எம்பெருமான் புன்முறுவல் செய்து "தேவீ! தசக்ரீவன் என்பான் மலையை எடுக்கின்றனன்" என்று கூறி ஊன்றியிருந்த இடத்திருவடிமலரின் விரலால் சிறிதே ஊன்றியருளினர். தசக்ரீவன் மலையின்கீழ் நெருக்குண்டு அதினின்றும் வெளிப்பட மாட்டாமல் நெடிது புலம்பியழுதான். ஆயிரம் ஆண்டு அங்ஙனம் அழுதபடியால் அவனுக்கு இராவணன் என்ற பேர் உண்டாயிற்று.

யாழ்வல்லோராகிய நாரதர் அவ்வழி செல்லும்போது வாய்விட்டுக் கதறி யழுகின்ற இராவணனைக் கண்ணுற்று இரக்கமுற்றனர். "தசக்ரீவனே! வீணே அழாதே. கருணைக் கடலாகிய சிவபெருமானை இன்னிசையால் பாடித் துதி செய்வாய். இசைக்கு இறைவன் உருகித் தண்ணருள் புரிவார்" என்று கூறிச் சென்றனர். இராவணன் அதுகேட்டு இசைக்குரிய கருவி யின்மையால், தனது தலைகளில் ஒன்றைத் திருகி எடுத்து தனது கரங்களில் ஒன்றைப் பறித்து அதில் மாட்டி நரம்புகளைக் கூட்டி தம்பூராவாக மீட்டி இனிய கீதங்களால் எம்பெருமானை உள்ளம் உருகிப் பாடினன். அந்த இன்னிசையைக் கேட்ட இறைவர் கால் விரலைச் சிறிது தளர்த்தி அவனை வெளிப்படுமாறு அருள் புரிந்தனர். இராவணன் வெளிப்பட்டு திருநந்திதேவரைத் தொழுது அவர் விடைதர திருக்கோயிலுக்குள் சென்று உமையம்மையாரையும் சிவபெருமானையும் தொழுது துதித்து நின்றனன். பரமன் மகிழ்ந்து இராவணனுக்கு நிறைந்த நாளும் சிறந்த வாளும் வழங்கி அருள் புரிந்தனர்.

> தீர்த்தமா மலையை நோக்கிச் செருவலி யரக்கன் சென்று
> பேர்த்தலும் பேதை யஞ்சப் பெருவிர லதனை யூன்றிச்
> சீர்த்தமா முடிகள் பத்துஞ் சிதறுவித் தவனை யன்று
> ஆர்த்தவா யலற வைத்தார் அதிகைவீ ரட்ட னாரே.
>
> கங்கைநீர் சடையுள் வைக்கக் காண்டலும் மங்கை யூடத்
> தென்கையான் தேர்க டாவிச் சென்றெடுத் தான்ம லையை
> முன்கைமா நரம்பு வெட்டி முன்னிருக் கிசைகள் பாட
> அங்கைவா ளருளி னூர் அணிமறைக் காடு ரானே.
>
> —அப்பர்.

நின் பதமலர் நுளத்தில் நாளும் நினைவுறு கருத்தர்:—

எம்பெருமானுடைய திருவடித் தாமரைகளை இடையறாது சிந்திப்பதுவே சிறந்த தவமுமாகும். முத்திக்குளரிய நல்வழியும் அதுவே யாகும். எல்லாப் பெரியோர்களும் இதனையே இனிது விளக்கிக் கூறியருளினர்கள்.

> "இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க"
> —மணிவாசகர்.
>
> "அனைத்தும் வேடமாம் அம்பலக் கூத்தனை
> தினைத்துணைப் பொழுதும் மறந் துய்வனே" —அப்பர்.
> "நாளும் நினைவது பெறவேணும்" —அருணகிரிநாதர்.

கருத்தர் தாள்கள் பணியவும் எனக்கு ஞானம்:—

அடியார்கள் அடிமலரைச் சிந்திப்பதும் வந்திப்பதும் இறைவன் திருவருளை யடைதற்குச் சாதனமாகும். பசுவின்

பாலமுதைப் பெறுதற்கு அதன் கன்று துணை செய்வது கண்கூடு. பசுவைப்போல் இறைவன்; பால்போல் திருவருள்; கன்றுபோல் அடியவர். அடியவர் பெருமையை அயனுலும் அளக்கலாகாது. நேரே இறைவனை அடுத்தவர்க்கு முத்திநலம் சிறிதுகாலந் தாழ்த்து கிடைக்கும். அடியவரை யடுத்தவர்க்கு விரைவில் கிடைக்கும். பட்டினத்தடிகள் பரமேஸ்வரனை யடுத்தார்; பத்திரகிரியார் பட்டினத்தடிகளை யடுத்தார். பரமனை யடுத்த பட்டினத்தாருக்கு முன் அவரை யடுத்த பத்திரகிரியாருக்கு முத்தி கிடைத்து விட்டது. திருநாவுக்கரசரை யடுத்த அப்பூதியடிகளும், சுந்தரமூர்த்தி நாயனுரை யடுத்த பெருமிழலைக்குரும்பனுரும் முத்திநலம் பெற்றது சிந்தித்தற்குரியது.

பணியவும்என்ற எச்சவும்மையால் சிந்திக்கவும் என்று பொருள் செய்யப்பட்டது. ஞானமிருந்தாலன்றி அடியார் பக்தி வராது. ஆதலினுல் "பணியவு மெனக்கு ஞானம்" என்றனர்.

சுருதிகள் உரைத்த வேதன்:—

சுருதி - வேதம். செவியினுல் கேட்டுக்கேட்டு அத்யயனஞ் செய்வதால் வேதத்திற்கு சுருதி என்ற பெயருண்டாயிறறு. அச் சுருதியை பிரமதேவன் கூறத் தொடங்கிய போது, முருகவேள் முதல் எழுத்தாகிய பிரணவ மந்திரத்தின் உட்பொருளை வினவியருளி, அதனைக் கூறமாட்டாத பிரமதேவனைக் குட்டி நெட்டிச் சிறை செய்தனர்.

* * * "—படைப்போன்
அகந்தை யுரைப்பமறை யாதி யெழுத்தோன்
றுகந்த பிரணவத்தின் உண்மை — புகன்றிலையால்
சிட்டித் தொழிலதனைச் செய்வதெங்ங னென்றுமுனம்
குட்டிச் சிறை யிருத்துங் கோமானே" —கந்தர்கலிவெண்பா.

சரஸ்வதிநதிக்கண் வீறு வயிரவிவனம்:—

சரஸ்வதிநதி ஏழு நதிகளுள் ஒன்று. மிகவும் புனிதமானது. அது வடக்கே யுள்ளது. அந் நதியின் கரையில் வயிரவிவனம் மிகவும் செழிப்பாக விளங்கும். அவ் வனத்தில் எழுந்தருளியுள்ள இறைவனை அருணகிரிநாதர் பாடுகின்

ஓம் குஹாய நம:

# கந்தரலங்காரம்

(௬கஎ-ம் பக்கத் தொடர்ச்சி.)

குமரா சரணஞ் சரணமேன் றண்டர் குழாந்துதிக்கும்
அமரா வதியிற் பெருமாள் திருமுக மாறுங்கண்ட
தமராகி வைகுந் தனியான ஞான தபோதனர்க்கிங்
கெமராசன் விட்ட கடையேடு வந்தினி யென்செயுமே. (87)

பதவுரை.

குமரா சரணம் சரணம் என்று - "குமாரக்கடவுளே! அடைக்கலம் அடைக்கலம்" என்று கூறி, அண்டர் குழாம் துதிக்கும் - தேவக்கூட்டங்கள் துதிசெய்கின்ற, அமராவதியில் பெருமாள் - அமராவதி யென்னும் தேவருலகில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமானுடைய, திருமுகம் ஆறும் கண்ட - மேன்மை பொருந்திய திருமுகங்கள் ஆறையுந் தெரிசித்த, தமர் ஆகி வைகும் - அவருடைய பரிசனமாகி இனிது வாழ்கின்ற, தனி ஆன ஞான தபோதனர்க்கு - ஒப்பற்ற ஞானவீரர்களாம் தவச்செல்வர்கட்கு, இங்கு - இவ்விடத்தில், எமராஜன் விட்ட - எல்லாவற்றையும் அடக்குபவனுகிய கூற்றுவன் எழுதியனுப்பிய, கடை ஏடு வந்து - இறுதிக்காலத்தில் வரும் ஓலையானது வந்து, இனி என் செயுமே - அவரை இனிமேல் என்னசெய்ய முடியும்? (ஒன்றுஞ் செய்யமுடியாது)

---

றனர். இதனுல் அருணகிரிநாதர் வடநாடு முழுவதும் சுற்றியுள்ளார் என்பது தெரிகின்றது.

இந்த திருத்தலம் பஞ்சாப் மாகாணத்தில் இருப்பதாகத் தெரிகின்றது. திட்டமாக இடம் விளங்கவில்லை.

கருத்துரை.

உமாதேவியாரது புதல்வரே! திருமால் மருகரே! ஞான குருநாதரே! வேலாயுதரே! வயிரவிவனம் வாழ் முருகக்கடவுளே! உமது திருவடியைச் சிந்திக்கும் அடியாரிடம் மாறாத பக்தி யுண்டாகுமாறு அடியேனுக்கு ஞானத்தை யருள்புரிவீர்.

## விரிவுரை.

குமரா சரணம் சரணம்:—

குமரா என்பது ஒரு சிறந்த மந்திரம். கு - உலகமாயை; மரா - போக்குவது; உலகமாயையை நீக்குவது. இம் மந்திரத்தை இடையறாது சிந்திப்பவர்க்கு மலமாயா கன்மங்கள் தொலையும். சிவபெருமான் பிரணவோபதேசங் கேட்கும்போது கூறிய மந்திரமும் இக் குமார மந்திரமேயாம்.

"நாதா குமரா நமவென் றரனார்
ஓதா யென ஓதிய தெப்பொருள்தான்" —அநுபூதி.

ஆயிரம் மறைகளுங் கூறும் மந்திரமும் இதுவேயாம்.

* * * 'மறை யாயிரங்களும்
குமரகுரு வென வலிய சேட னஞ்சவன் திடுவோனே"
—திருப்புகழ்.

"குமராசரணம்" என்று அமரர்கள் எம்பெருமானிடம் அடைக்கலம் புகுந்து துதி புரிவர். ஆதலின் அன்பர்கள் "குமராசரணம்" என்ற இம் மந்திரத்தை அடிக்கடி கூறி உய்வு பெறுவார்களாக. சுவாமிகள் கந்தரந்தாதியில், தும்முகின்றபோது "குமராசரணம்" என்று கூறுமாறு உபதேசிக்கின்றனர்.

சிறுமிக் குமர நிகர்வீர் பகிரச் சிதையுயிர்த்துச்
சிறுமிக் குமர சரண மென்னீருய்வீர் செந்தினைமேற்
சிறுமிக் குமர புரைத்து நின்றோன்சிலை வேட்டுவனெச்
சிறுமிக் குமர வணிமுடி யான்மகன் சிறடிக்கே.

இதன் உரை.

சிறு உமிக்கு மரம் நிகர்வீர் பகிர - பிறருக்குப் பகிர்ந்து சிறிய குற்றுமியை யாயினும் இட்டு உண்ணுதற்கு மனம் இன்றி மரம் போன்று இருப்பவரே! சிதை உயிர் துச்சில் - அழிந்துபோவதும் பிராணனுக்கு ஒதுக்கிடமுமாகிய இவ் வுடலின்கண், தும்மி - ஒரு தும்மல் உண்டாகும்போதாவது, குமர சரணம் என்னீர் - "குமரா சரணம்" என்று சொல்லுங்கள்; செம் தினைமேல் சிறுமிக்கு - சிவந்த தினைப்புனத்தில் வாழ்ந்த வள்ளிநாயகிக்கு, மரபு உரைத்து நின்றோன் - தனது மரபின் வழிகளை எடுத்துரைத்து வேண்டி நின்றவரும், சிலை வேடன் எச்சில் - வில்லை யுடைய வேட்டுவமணியாகிய கண்ணப்பர் கடித்துச் சுவை பார்த்த எச்சில் ஊன் அமுதினை,



து மிக்கும் - உவப்புடனே யுண்டவரும் மேன்மை தங்கியவரும் ஆகிய, அரவு அணி முடியான் - பாம்பை யணிந்த சிவமூர்த்தியின், மகன் சிறு அடிக்கே - திருக்குமாரரு மாகிய முருகப்பெருமானது சிறிய திருவடியைக் கருதிக்கொண்டே, உய்வீர் - பிழைப்பீர்கள்.

அண்டர் குழாம் துதிக்கும்:—

அண்டர் - தேவர். சேய்மையி லுள்ளவர் என்பது பொருள். சூராதியவுணர்களை மாய்த்து தேவர்களைத் துன்பக் கடலினின்றுங் கைதூக்கி இன்பக்கரையில் சேர்த்த பரமகருணாநிதி யாதலின் குமரக்கடவுளை நன்றி பாராட்டு முகத்தால் அமரர்கள் துதிபுரிகின்றனர்.

அமராவதியில் பெருமாள்:—

அமராவதி - தேவருலகிற்குத் தலைநகரம். ஆங்கு எழுந்தருளியுள்ள முருகப்பெருமானைக் குறிக்கின்றது.

திருமுகம் ஆறுங் கண்ட தமர்:—

முருகப்பெருமானுடைய ஒருமுகத்தைக் கண்டார்க்கே சித்தியு முத்தியு முண்டாகும். எல்லா உலகங்களும் அவருக்கு அடிமைப்படும். ஆறுமுகங் கண்டார்க்கு உரிய பெருமையை யாரே அளக்க வல்லார்? ஆறுதிருமுகங்களையுந் தெரிசித்து எம்பெருமானுக்குத் தமராக விளங்குபவர்.

தமர் - பரிசனம், உறவு.

"முருகப்பெருமானுடைய தமர்" என்பது ஒரு பெரிய பதவி. அதனினும் மேற்பட்ட பதவி இல்லை. ஒரு பெரிய சக்ரவர்த்தியின் ஆள் என்னும்போது அந்த ஆளுக்கு எத்துணையோ பெரிய மதிப்பு ஏற்படுகின்றது. அகிலாண்ட கோடிகட்குந் தலைவராய ஆண்டவருடைய ஆள் என்னும் போது அதற்குரிய பெருமை வேறு எதற்குத்தான்வரும்?

"கிரிவாய் விடுவிக் ரமவே விறையோன்
பரிவா ரமெனும் பதமே வலையே"

என்று அநுபூதியில் மிகஅழகாக ஓதுகின்றனர்.

சுந்தரமூர்த்திசுவாமிகள் திருக்கைலாய மலைக்குச் சென்றபோது, முனிவர்கள் "இவர் யார்" என்று வினவிய போது, சிவபெருமான் "இவன் நமது தமர்" என்று திருவாய்மலர்ந்தருளினர்.

"மந்திர மாமுனிவர் இவன் யாரென்ன
நந்தம ரூர னென்றுன் கொடித்தான் மலை உத்தமனே"

தனியான ஞான தபோதனர்:—

தனி - ஒப்பின்மை.

முருகவேளுடைய பரிசனர்க்குச் சமானமில்லையென்கின்றனர். தபோதனர் - தவத்தையே செல்வமாகவுடையவர்; தவச் செல்வர்.

மனிதனுக்குத் தவத்தினுஞ் சிறந்த பொருள் யாதொன்றுமில்லை; உயிர்க்கு உறுதி செய்வது தவமே. நிக்ரகானுக்ரகசத்தி தவத்தால் வரும். வானவர்நாடு வழி திறப்பதுந் தவத்தாலும்.

ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலும்
எண்ணிற் றவத்தான் வரும்.
தானமுந் தவமுந் தான் செய்வராயின்
வானவர் நாடு வழிதிறந் திடுமே.

ஒவ்வொருவரும் நாடோறும் சிறிது நேரமாகிலும் உள்ளத்தை ஒருமுகப்படுத்தி தவம்புரிதல் வேண்டும்.

தவத்தினால் உயர்வு பெற்றவர் பலர். தவஞ் செய்பவரைக் கூற்றுவனுங் கும்பிடுவான். தவத்தின் ஆற்றலினால் விஸ்வாமித்திரர் மறுஉலகத்தைப் படைக்க முயன்றனர். பல பொருள்களையும் படைத்தனர். தவத்தால் சரபங்கர் அழியாத வீடுபேறு பெற்றனர். தபோபலமுடையவர்க்கு ஐம்பெரும் பூதங்களும் அடங்கும். ஐந்தொழிலும் ஆற்றும் வன்மை அவர்கட்கு உண்டு. தவத்தால் சாதிக்காதது ஒன்றுமில்லை. ஆதலினால்தான் "தனியான ஞான தபோதனர்" என்றனர்.

எமராஜன் விட்ட கடையேடு வந்தினி யென்செயுமே:—

கடையேடு - ஆயுள்முடிவில் கூற்றுவனால் விடப்படுகின்ற இறுதி ஓலை. நமனோலை கொண்டு இயமதூதர் வந்து அச்சுறுத்தி ஆவியைக் கொண்டு செல்வர்.

"வருபவர்க ளோலை கொண்டு நமனுடைய தூத ரென்று
மடிபிடிய தாக நின்று தொடர்போது"
—திருப்புகழ்.



முருகா

# சேக்கிழார்.

தூக்குசீர்த் திருத் தொண்டர் தொகைவிரி
வாக்கினாற் சொல்ல வல்லபிரான் எங்கள்
பாக்கியப் பயனாப் பதி குன்றைவாழ்
சேக்கிழா னடி சென்னி யிருத்துவாம்.

சான்றோர் பலர் வாழுஞ் சால்புடையது தொண்டை நன்னாடு. பாலாறு சூழப் பல்வளமும் பெருகிப் பெருமை மிக்கது. அந் நாட்டில் இருபத்திநான்கு கோட்டங்கள் உண்டு; அவற்றுள் புலியூர்க்கோட்டத்தைச் சேர்ந்த குன்றைவள நாட்டில் விளங்குவது குன்றத்தூர் என்னும் நற்றவப்பதி. அவ்வூரில் சேக்கிழார் என்னுந் திருமரபு சிறந்திருந்தது.

சோழ மன்னன் முற்காலத்திலே தொண்டை மண்டலத்தில் குடியேற்றும்பொருட்டு தேர்ந்தெடுத்த நாற்பத்

---

தவம்புரிந்து திருமுருகவேளைத் தெரிசித்த பெரியோர்களிடம் நமனோலை அணுகாது. அணுகினும் காலாவதியான பத்திரம்போல் வேலைசெய்யாது.

நாளென் செயும்வினை தானென் செயுமெனை நாடிவந்த
கோளென் செயுங்கொடுங் கூற்றென் செயுங்கும ரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந் தண்டையுஞ் சண்முகமுந்
தோளுங் கடம்பு மெனக்குமுன் னேவந்து தோன்றிடினே.

ஆதலினால் இடையறாது முருகப்பெருமானை வந்தித்தும், வாழ்த்தியும், சிந்தித்தும் அன்பு செய்து தெரிசிக்க முயலுதல் வேண்டும்.

கருத்துரை.

தேவர்கள் துதிக்குந் திருமுருகேசனைத் தெரிசித்த ஞானிகட்கு எமபயம் ஒருபோதும் இல்லை.

தெண்ணுயிரம் நற்குடிகளுள் கூடல்கிழான், புரிசைகிழான், வெண்குளப்பாக்கிழான் என்று கூறும் மரபினருடன் சேர்த்து எண்ணத் தக்கது இந்தச் சேக்கிழார் மரபு. இத் திருமரபிலே செந்தமிழ்நாடு உய்ய அருள்மொழித்தேவர் அவதரித்தனர். (சேக்கிழார் என்றது குடிப்பெயர்; தாய் தந்தையர் இட்ட பேர் அருள்மொழித்தேவர் என்பதாம்.) அவருடைய தம்பி பாலருவாயர்.

சேக்கிழார் சுவாமிகள் அவதரிக்கத் தவஞ் செய்தது வேளாளர்குலம். அக் குலத்தின் பெருமை ஆராலும் அளத் தற் கரியது. வேள் என்ற சொல் மண், விருப்பம் என்ற இரு பொருள்களை யுடையது. வேளாளர் என்பது மண்ணை உழுது ஆள்பவர் என்றும், உலகிலுள்ள உயிர்கட்கு உப காரத்தைச் செய்பவர் என்றும் பொருள்படும். ஆறு சம யங்கட்குந் தலைவியாகிய உமையம்மையார் காஞ்சியம்பதி யில் வழிபட்டபோது சிவபெருமான் தந்தருளிய இருநாழி நெல்லை அம்பிகை தமது மக்களாகிய வேளாண் மரபின ருக்குத் தந்தனர். அவர்கள் அதனைப் பெற்று உலகமே வயலாகவும், கடல் ஏரியாகவும், வருணன் கம்புகட்டியாக வும், பலராமன் கலப்பையாகவும், இயமனிடமுள்ள கிடா வும், ஈசனிடமுள்ள விடையும் உழவுமாடுகளாகவும், ஆண்டுதோறும் விதையைத் தப்பாமல் அளந்து தருபவர் கச்சியம் பதிக் காமபீடத்தில் எழுந்தருளியுள்ள அறம் வளர்த்த அம்மையாராகவும் இருக்கப்பெற்று எறும்புமுதல் இமையவர்வரை உலகிலுள்ள உயிர்கள் அனைத்தும் உணவு பெற்று உய்ய உழவு புரிந்து உதவுவர்.

பழையனூர் நீலி செய்த வஞ்சனையால் அவளுடைய கணவன் உயிரிழக்க, அங்ஙனம் அவன் மாய்ந்ததற்குக் காரணம் தாமாக இருந்ததால் வேளாள மன்றத் தலைவர் கள் எழுபது பேரும் தீக்குழி வீழ்ந்து உயிர் துறந்து திரு வாலங்காட்டுத் தேவன் திருவடி சேர்ந்து வாய்மையைக் காத்தனர். இத்தகைய காராளர் வயலை யுழுதுக் கையார நட்ட முடி திருந்திஞல், பாராளும் மன்னர் பசும்பொன் முடி திருந்தும். அன்றியும் அவர்கள் ஏரடிக்குஞ் சிறு தாற்



றுக்கோலே தரணியாளும் தனிமன்னர் செங்கோலுக்குத் துணைபுரிவது. அறுபது தனி நாயன்மாருள் பதின்மூவர் வேளாளராவர். ஆதலினல் சீராலும் பேராலும் உயர்ந்த காராளரது சிறப்பை ஆராலும் அளக்கற்பாலதன்று.

அக்காலத்து சோழவள நாட்டை இனிது அரசுபுரிந்து வந்தவர் அநபாய சோழர். அம் மன்னர்பிரான் அன்பும் அறனும் வாய்மையும் தூய்மையும் வீரமும் தீரமும் உடை யவர். அம் மன்னரிடம் அருள்மொழித் தேவருடைய தந் தையார் அமைச்சராக இருந்தனர். சோழர் அமைச்சரை ஒருசமயம் "கடலினும் பெரியது எது?" "உலகினும் பெரியது எது?" "மலையினும் பெரியது எது?" என்ற மூன்று வினக்களை வினவினர். அமைச்சர் தமது இல்ல மடைந்து விடையறியாராய் வாட்டமுற்று இருந்தனர். கலைபயின்றுவந்த நமது அருள்மொழித் தேவர் குறிப் பறிந்து, தந்தையாரது தாள்மலர் தொழுது "தந்தையே! ஏன் திருமுகம் சோர்ந்துளது?" என்று வினவினர். அவர் அரசன் வினவிய வினக்களைக் கூறி அதற்கு விடையறி யாது வருந்துவதாகக் கூறினர். அதுகேட்ட அடிகள் புன் முறுவல்பூத்து ஏடும் எழுத்தாணியும் எடுத்து திருவள்ளுவ ரது திருக்குறளிலிருந்தே கீழ்வரும் மூன்று பாக்களை எழு தித் தந்தையாரிடம் தந்தனர்.

பயன் தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலிற் பெரிது.

காலத்தி னற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.

நிலையில் திரியா தடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது.

இதனை அமைச்சர் அரசரிடந் தந்தனர். சோழமன் னர் பெரிதும் மகிழ்ந்து "மூன்று கேள்விக்கும் திருக்குற ளிலேயே விடைகண்ட திறம் மிகவும் வியமியது" என்று பாராட்டினர். அமைச்சர் 'இங்ஙனம் கண்டது அடியேனன்று; அடியேனது புதல்வன் அருள்மொழித் தேவனே" என்றனர். அதுகேட்ட அநபாய மன்னர் அதி சயித்து அத்தகைய அரும்புதல்வரைக் காண விரும்பி 'அறி

னுடை யொருவனே அரசனும் விரும்பும்' என்றபடி எல்லா வகையான விருதுகளும் அனுப்பி அருள்மொழித்தேவரை அரசவைக்கு அழைத்து, அவரை மிகவும் உபசரித்து முதல் மந்திரிப்பதவியை நல்கினர். அருள்மொழித் தேவர் மிக மிகத் திறமையுடன் அவ்வமைச்சுத் தொழிலை நடாத்தி அறநெறியை எங்கும் பரப்பினர். அவரது அறிவாற்றலைக் கண்ட மன்னர் பெரிதும் மகிழ்ந்து அவருக்குச் செங்கோல் ஓச்சும் தலைமையும், "உத்தமச் சோழபல்லவன்" என்ற பட்டமும் வழங்கினர். அருள்மொழித்தேவர் மதி நலமும் ஒழுக்க நலமும் அன்புநலமும் உடையராய் உலகெலாம் போற்ற விளங்கினர். சோழநாட்டில் உள்ள திருநாகேச்சுரம் என்ற திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானிடம் சேக்கிழாருக்கு அளவற்ற அன்பு விளைந்தது. அம்மூர்த்தியையே தனது வழிபடு மூர்த்தியாகக் கொண்டனர். அதனுல் தமது பிறப்பிடமாகிய குன்றத்தூரிலே மாடவீதியும் திருக்கோயிலும் திருநாகேச்சுரத்தில் உள்ளதுபோலவே அமைத்து அதற்குத் திருநாகேச்சுரம் என்று பேரிட்டு, நித்திய நைமித்திக வழிபாடுகள் புரிவித்து மகிழ்ந்தனர்.

இவ்வாறு சேக்கிழார் இமசேது பரியந்தம் நன்னெறி நிறுவி வருங் காலத்தில், காமச்சுவை நிரம்பிய சிந்தாமணி என்னும் நூலை சைவசமயிகளும் அதன் தமிழின் இனிமை கருதிக் கற்றுத் தமது பொன்னே போன்ற வாணுளை வீணுளாகக் கழிப்பா ராயினர்கள். அது நெற்குத்தி யுண்ணுது உமிக்குத்திக் கை வருந்துவதுபோலும், கறவைப் பசு நிற்க மலட்டுப் பசுவைக் கறந்து உளந் தளர்வதுபோலும், பூஞ்சோலைவழி யிருக்கக் குழியில் விழுந்து சேற்றில் சிக்கித் தவிப்பதுபோலும், கரும்பிருக்க இரும்பை மென்று பல்லுடைத்துக்கொள்வதுபோலும், விளக்கிருக்க மின் மினியை நாடுவதுபோலு மாகும்.

கலகமிடும் அமண்முருட்டுக் கையர் பொய்யே
கட்டிநடத் தியசிந்தா மணியை மெய்யென்
றுலகிலுளோர் சிலர்கற்று நெற்குத் துண்ணு
துமிக்குத்திக் கைவருந்திக் கறவை நிற்க



மலடுகறந் துளந்தளர்ந்து குளிர்பூஞ் சோலை
வழியிருக்கக் குழியில் விழுந் தளறுபாய்ந்து
விலைதருமென் கரும்பிருக்க இரும்பை மென்று
விளக்கிருக்க மின்மினித்தீக் காய்ந்து நொந்தார்.

அநபாயமன்னரும் அந்தச் சீவகசிந்தாமணியை மெய்ந்நூல் என்று எண்ணிப் பாராட்டிக் கேட்பாராயினர். அதனை யறிந்து சேக்கிழார் வருந்தினர். "மந்திரிக்கழகு வரும்பொரு ளுரைத்தல்" என்றபடி அமைச்சராகிய அவருக்கு மேல்வருந் தன்மை தெரிந்தது. அரசனைத் திருத்துவது அமைச்சனது கடமையயன்றோ? அரசன் தீவழிச் செல்வானுயின் உலகமும் அவ்வழிச் செல்லும். "அரசனெவ்வழி யவ்வழி குடிகள்". கூன்பாண்டியன் சமண சமயம் புகுந்ததனுல் பாண்டிநாடும் அச்சமண் இருளால் மூடப்பட்டது. ஆதலின் அரசனைத் திருத்தி நல்வழிப் படுத்த எண்ணினர்.

"தம்முயிர்க் குறுதி யெண்ணுர் தலைமகன் வெருண்டபோதும்
வெம்மையைத் தாங்கி நீதி விடாதுநின் றுரைக்கும் வீரர்"

என்று அமைச்சரது தன்மையைக் கம்பர் கூறுவதும் ஈண்டு சிந்தித்தற்குரியது.

சேக்கிழார் மன்னரைச் சந்தித்து "அரசரேறே! நீர் தெய்வநல மிக்க சைவசமயியா யிருந்தும், இருமைக்கும் நன்மை செய்யாத அவகதையைக் கேட்டுப் போது கழிக்கின்றீர். இம்மை மறுமை வீடு என்னும் மும்மைக்கும் நன்மை பயக்கும் சிவகதையைக் கேட்டு உயிருக்கு உறுதி தேடுவாய்" என்றனர். மன்னர் "ஐயா! இது அவகதையாயின் சிவகதை யாது? அதன் அருமையும் பெருமையும் யாவை? அதனைக் கூறியவர் யார்? கேட்டவர் யாவர்? உய்வு பெற உரைத்திடுவீர்" என்று கேட்டார். சேக்கிழார் "வேந்தரே! திருவாரூரிலே கருமூல மகற்றுந் திருமூலநாதராம் சிவபெருமான் அடியெடுத்துக் கொடுக்க, சமயகுரவர் நால்வருள் ஒருவராகியசுந்தரமூர்த்திநாயனர் பதினொருபாக்களால் திருத்தொண்டத்தொகை பாடியருளினர். அத்திருத்தொண்டத்தொகைக்கு, திருநாரையூரிலே நம்பியாண்டார் நம்பி, பொல்லாப்பிள்ளையார் பொருள் கூற, அப் பிள்ளை

யார்பால் இளமையிலேயே வேதாகமங்களைக் கேட்டிருந்த நபியாண்டார்நம்பி வகையாக ஒரு அந்தாதி பாடியருளி னுர். அந்த நம்பியாண்டார்நம்பியந்தாதியைத் திருமுறை கண்ட ராஜராஜ அபயகுலசேகர சோழமன்னரும், சிவா லயதேவர் முதலியோரும் எடுத்து இனிது பாராட்டினுர் கள்" என்றூர். மன்னன் மகிழ்ந்து "அதனை ஓதியருளும்" என்ன, சேக்கிழாரடிகள் திருத்தொண்டத்தொகையையும் நம்பியாண்டார்நம்பி யந்தாதி யாகிய வகையையும் கூறி, விரித்துப் பொருள் கூறியருளினுர். வளவர்கோன் கேட்டு உள்ளம் உருகி, சிவபெருமானது திருவருள் திறத்தையும், திருத்தொண்டர்களின் அன்பின் திறத்தையும் எண்ணி எண்ணி இதயம் மகிழ்ந்து, சேக்கிழாரை நோக்கி, "இப் புண்ணிய மெய்வரலாறுகளை விரித்து உலக மெல்லாம் உணர்ந்து தெளிந்துய்யப் பெருங்காவியமாகப் பாடித் தரு வீர்" என்று பொன்னும் மணியும் தந்தார்.

அறஞ் செய்தற்காகும் அச் செல்வத்தை அருள் மொழித் தேவர் பெற்றுக்கொண்டு மன்னர் பெருமான் பால் விடை பெற்றுக் கொண்டு தில்லையம்பதியை யடைந் தார். தில்லையின் எல்லை வந்தவுடனேயே வாகனத்தினின் றும் இறங்கி அம்பலவாணரை நினைந்து மண்மேல் வீழ்ந்து, உடல் புளகித்து, உள்ளம் உருகி, திருவருள் மய மாகி சிவகங்கையில் முழுகி, பொன்னம்பலஞ் சென்று ஆனந்தத் தாண்டவம்புரியும் அம்பலவாணரைக் கண்குளி ரக் கண்டு, பேரானந்தமுற்று, தொடுமணற் கேணிபோல் கண்ணீர்பெருக, "அம்பலவாணரே! அடியேன் உமது திருத்தொண்டர்களது மெய்வரலாறுகளைப் பாடிமுடிக்க அடியெடுத்துத்தரவேண்டும்" என்று வேண்டினர்.

அப்பொழுது வானில் அருள்நாத ஒலியாக "உலகெ லாம்" என்ற ஒரு அருள்வாக்கு யாவருங் கேட்க எழுந் தது. அதனைக்கேட்ட தில்லைவாழந்தணரும் ஏனேரும் அதி சயித்தனர். பரிவட்டமும் திருநீறும் தரப்பட்டன. அவற் றைப் பெற்ற அடிகள் சமய குரவர்களையும் சேவித்து ஆயிரக்கால் மண்டபம் எய்தி, திருவருளைச் சிந்தித்து தவ வொழுக்கத்துடன் இருந்து, "உலகெலாம்" என்று இறை



வன் அடியெடுத்துக்கொடுத்ததையே முதலாக வைத்து மிகமிக இனிய செந்தமிழ்ப்பாடல்களாகப் பாடி 4253 திருப்பாடல்களால் முடித்து "திருத்தொண்டர்புராணம்" என்று அதற்குப் பேரிட்டு, அம்பலவாணர் திருவடியில் வைத்து வழிபட்டனர்.

சேக்கிழார் தில்லைக்கு எழுந்தருளியபின், அநபாயமன் னர் பலப்பல தூதர்களையும் ஒற்றர்களையும் அவ்வப்போது அனுப்பி புராணம் எவ்வளவுவரை பாடியாயிற்று? இன் னும் முடிய எத்தனை நாளாகும்? அதற்கு நாம் செய்யத் தக்க பணிகள் யாவை?" என்று கேட்டுக்கொண்டேயிருந் தனர். தூதர்கள் பாதி முடிந்ததென்றும், நாளை முடியும் என்றும் கூறுவர்; பின்னர் தூதர் "புராணம் முடிவு பெற் றது" என்று கூறினர். அங்ஙனம்கூறிய தூதர்கட்கெல்லாம் பொன்னும் மணியும் ஆடையும் வழங்கினுர். பரிவாரங்க ளுடன் தில்லைக்குப் புறப்பட்டனர். அநபாயச்சோழர் வரவு தெரிந்து தில்லைமா நகரத்து அன்பர்களும், மூவாயிரம் அந் தணர்களும், சேக்கிழாரும் அரசரை எதிர்கொண்டு அழைத்து உபசரித்தார்கள். மன்னர்பெருமான் தனது மந்திரியாராகிய சேக்கிழாருடைய சிவநல உருவையும், தவ நலத் திருவையும் கண்டு, அவரது அடிமலர்மேல் வீழ்ந்து வணங்கினுர். கனகசபையில் எல்லோருமாகச் சென்று சேவித்தார்கள். "சோழனே! 'உலகெலாம்' என்று நாமே அடியெடுத்துக் கொடுக்க, நம் அன்பன் சேக்கிழான் திருத் தொண்டர்களது இனிய வரலாறுகளை விரித்துப் புராணம் பாடினுன்; அதனை நீ கேட்டு உய்வு பெறுக" என்று ஒரு அசரீரி வாக்கும், அம்பலவாணர் சிலம்பொலியும் பொன் னம்பலத்திலே அனைவருங் கேட்க எழுந்தன.

வேந்தர்கோமான் மனமிக மகிழ்ந்து, திருத்தொண்டர் புராணத்தைக் கேட்கும்பொருட்டு திசைகள்தோறுமுள்ள அன்பர்கட்கும், அறிஞர்கட்கும் ஓலைகள் அனுப்பினுர். திருக்கோயிலையும் திருவீதிகளையும் நன்கு அலங்கரிக்கச் செய்தார். உலகில் எல்லாப்பக்கங்களிலிருந்தும் வடமொழி தென்மொழி வல்ல புலவர்பெருமக்களும், சிற்றரசர்களும், அடியார்களும், பிறரும் வந்து சிதம்பரத்தில் குழுமினுர்கள்.

கனகசபைக்குமுன் கோமயத்தால் மெழுகி தூபதீபங் கொடுத்து அறுகால்பீடம் இட்டு அதன்மேல் பசும்பட்டு விரித்து நறுமலர் தூவி அதன்மேல் திருத்தொண்டர் புராணத்தை எழுந்தருளப் புரிந்தனர். மன்னர்பெருமான் அருண்மொழித்தேவரை அடிபணிந்து "தேவரீரே திருத்

தொண்டர் புராணத்தை வாசித்துப் பொருள் அருளிச் செய்வீர்'' என்று வேண்டினார். சேக்கிழார்பெருமான் அப் பேரவையின் நடுவே அமர்ந்து, அம்பலவாணர் ஆனந்தத் தாண்டவம் புரிந்த நாளும், திருஞானசம்பந்தர் திருவவதாரம் புரிந்த நாளும், திருவாய் மலர்ந்து அழுது திருஞானப் பாலைப் பருகிய நாளும் திருவாதிரை நாளாகும் ஆதலின் சித்திரைமாதம் திருவாதிரை நாளில் திருத்தொண்டர் புராணத்தை அரங்கேற்றத் தொடங்கினார். அடுத்த சித்திரைத் திருவாதிரை நாளன்று புராணம் இனிது முடிவு பெற்றது. இடையிடையே மூவர் தேவாரமும், திருமந்திரமும், காரைக்காலம்மையார் அருளிய திருப்பாடல்களும், சேரமான்பெருமான்அருளிய அருட்பாடல்களும், ஐயடிகள் அருளிய திருப்பாக்களும் பொருள் விரித்துப் பேசப் பட்டன. அரசர்பெருமான் நாடோறும் புராணம் கேட்போர் அனைவர்களுக்கும் இனிய நல்லுணவு வழங்கினார். திருமுறைகளையும், திருத்தொண்டர் புராணத்தையும் எழுதுவோரும், பாராட்டுவோரும், ஆங்காங்கு நிறைந்துள்ள கவி நயங்களைக் கண்டு மகிழ்வோரும், சேக்கிழாரடிகளின் தெய்வப் புலமையை வியந்து புகழ்வோரும், இன்பக் கண்ணீர் வடித்து அழுவோருமாக அன்பர்கள் விளங்கினர். பல்லாயிரக் கணக்கான அடியார்கள் "அரகர" என்று முழங்கும் ஓசை எழுகடல் ஓசையை அடக்கியது.

திருத்தொண்டர் புராணத்தைத் தில்லைவாழந்தணர்கள் சிவமூலமந்திரத்தால் அருச்சித்து தூபதீபம் காட்டி வழிபட்டு ஐந்தாவது வேதமெனப் பாராட்டினார்கள். அநபாய மன்னர் அத் திருமுறையைப் பட்டினுல் சூழ்ந்து பொற்றட்டில் ஏந்தி யானையின் சிரத்தில் வைத்து சேக்கிழார் பெருமானையும் அவ் வழகிய யானைமேல் ஏற்றித் தானும் ஏறி இருகரத்தாலும் கவரி வீசி "இதுவன்றோ நான் செய்த தவப்பயன்'' என்று மகிழ்ந்தனர். விண்ணவர் பூமாரி பொழிந்தனர். அவ்வாறு திருவீதி வலமாக வரும் போழ்து சிதம்பரம் பூலோக கைலாசமாகப் பொலிவுற்றது. எல்லா வீதிகளிலும் வாழையும், கமுகும் நாட்டி, தோரணங்கள் அமைத்து, மனைகள் தோறும் பூரணகும்பங்கள் வைத்து, மலர் மாலைகளைத் தூக்கி, திருவிளக்கு ஏற்றி, இன்னிசைப் பாடல்கள் ஓதி அன்பர்கள் ஆரவாரித்தனர். 'திருமுறைத் தமிழ் பாடிய மூவரும் ஒருருவாக முளைத்தனர்' என்பார் சிலர். 'வாணிதேவி வெண்டாமரைப் பூவையும் மறந்தனள்; சங்கப் புலவோர் பாவையும் மறந்தனள்; பதுமத்தோன் நாவையும் மறந்தனள்; குறுமுனியாம் தமிழ்க் கோவையும் மறந்தனள். தெய்வச் சேக்கிழார் நாவில் குடிகொண்டனள்' என்பார் சிலர். 'கருங்கடலைக் கரத்தால் நீந்தலாம்; கடற்கரையின் நொய்மணலை எண்ணி அளவிடலாம்; பெருங் கடல்மேல் வரும் அலைகளையும் எண்ணலாம்; அக் கடலில் வாழ் மீனையும் அளவிடலாம்; விண்ணுறை உடுக்களையும் அளவிடலாம். திருத்தொண்டர் புராணத்தை யாரே அளவிடவல்லார்? நம் சேக்கிழார்க்கே எளிதாகும்; அமரர்க்கும் அரிதாகும்' என்பார் சிலர்.



கருங்கடலைக் கைநீத்துக் கொள வெளிது முந்நீர்க்
  கடற்கரையின் நொய் மணலை எண்ணி அளவிடலாம்
பெருங்கடன்மேல் வருந்திரையை ஒன்றிரண் டென்றெண்ணிப்
  பிரித்தெழுதிக் கடையிலக்கம் பிரித்து விடலாகும்
தருங்கடலின் மீனை அளவிடலாகும் வானத்
  தாரகையை அளவிடலாம் சங்கரன் தாள்தமது
சிரங்கொள் திருத்தொண்டர் புராணத்தை அளவிடநம்
  சேக்கிழார்க் கெளிதலது தேவர்க்கும் அரிதே.

திருவோலக்கம் முடிந்தபின் திருத்தொண்டர் புராணத்தைக் கனக சபையில் வைத்தனர். சேக்கிழாரடிகளுக்குத் "தொண்டர் சீர் பரவுவார்'' என்ற திருநாமமும், ஞானமுடியும் சூட்டிச் சோழர் பெருமான் வணங்கினார்.

| | |
|---|---|
| திருஞானசம்பந்தர் தேவாரம் | 3 |
| திருநாவுக்கரசர் தேவாரம் | 3 |
| சுந்தரர் தேவாரம் | 1 |
| திருவாசகம் | 1 |
| திருவிசைப்பா, திருப்பல்லாண்டு | 1 |
| திருமந்திரம் | 1 |
| திருமுகப்பாசுரம் முதலிய திருநாற்கோவை | 1 |
| | 11 |

சம்மிதாமந்திரம் பதினொன்று ஆதலின் மேலேகண்ட திருமுறைகளைப் பதினொன்றாக நம்பியாண்டார் நம்பி முன்னே வகுத்து வைத்தனர். அப் பதினொரு திருமுறைகளுடன் திருத்தொண்டர் புராணத்தைப் பன்னிரண்டாவது திருமுறையாகச் சேர்த்துச் செப்பேடு செய்து பொன்னம்பலத்தில் வைத்தனர்.

பின்னர் சேக்கிழார் சுவாமிகள் தில்லையிலேயே இருந்து, அம்பலவாணரை வழிபட்டுத் தவவாழ்வில் தலைசிறந்து நின்றனர். அநபாய மன்னர் அருள்மொழித்தேவருடைய தம்பியாகிய பாலறுவாயர் குன்றத்தூரிலே தமது

உ

முருகா

# பெரியபுராணம்.

உலகெலா முணர்ந் தோதற் கரியவன்
நிலவுலா விய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

தில்லைவா ழந்தணரே முதலாகச் சீர்படைத்த
தொல்லையதாந் திருத்தொண்டத் தொகையடியார் பதம்போற்றி
ஒல்லையவர் புராணகதை யுலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர்ச் சேக்கிழா ரடிபோற்றி.

எந்தை கந்தவேள் திருவருள் துணைகொண்டு, பலகாலும் அன்பர்கள் பலர் விரும்பி வேண்டிக்கொண்டதனுலும், பண்டை நல்வினைப் பயனுலும், திருத்தொண்டர் புராணம் என்னும் பெரியபுராணத்தை உள்ளுந்தொறும் இனிக்கும் தெள்ளுதமிழ் மணக்கும் இச் செந்தமிழ் நாட்டு அன்பர்கள் பலரும் படித்துப் பயன் பெறும் பொருட்டு, இன்றியமையாத சில இனிய பாடல்களுடன் உரைநடையாக எழுதலானேன். முருகவேள் முழுமுதற்கருணை முன்னின்று முடிக்குமாக.

---

பெயரால் திருக்குளம் அமைத்து திருநாகேச்சுரப் பெருமானை வழிபட்டுக்கொண்டிருப்பதை அறிந்து அவரை வரவழைத்து அமைச்சுப்பதவியைத் தந்து 'தொண்டைமான்' என்ற பட்டத்தையும் வழங்கி அரசுபுரிந்தனர். சேக்கிழார் பெருமான் உலகெலாமுய்ய அலகிலாப்புகழுடை அடியவர் பெருமையை விளக்கி அம்பலவாணர் திருவடி நீழலிற் சேர்ந்தனர்.



## திருமலைச் சிறப்பு.

அருட்பெருஞ் சோதியரும், ஆதியும் நடுவும் ஈறும் அற்ற அநாதி மலமுத்தரும், திருவருளே வடிவாகக் கொண்டவரும், பிறப் பிறப்பில்லாத பெருந்தகையும், முழுமுதற் பரம்பொருளும், முக்கண்ணுடைய மூவாமுதல்வரும், வேதாகமங்கள் காணாத வித்தகருமாகிய சிவபெருமான், எமையாண்டருளும் இமயவல்லியம்மையுடன் நவமணிப் பீடத்தின்மீது எழுந்தருள விளங்குவது திருக்கைலாய மலை, அங்கு மூவருந் தேவரும் பாடிப் பரவுவர்; அரம்பையர் ஆடுவர்; நாரதாதி முனிகணங்கள் யாழினை முழக்குவர்; வேதவோசையும் சங்கநாத வோசையும் ஓதவோசைபோல் எப்பொழுதும் முழங்கிக் கொண்டிருக்கும். எண்ணில்லாத கதிர்கள் ஒருங்கே உதித்ததுபோல் ஞானஒளி வீசி எழில்மிகத் திகழ்வது அக் கயிலைமால்வரை. அக் கைலைமலையின்கண் பலகோடி பூதங்கள் வாழும். ஒவ்வொரு பூதமும் வேண்டுமாயின் ஐம்பெருந் தொழிலும் செய்யும்; நீடு தேவர் நிலைகளை நாட்டும். அத் திருமலையில் வேத்திரப் படைதாங்கி திருநந்திதேவர் காவல் புரிவர், தேவர்களும், மூவர்களும், முனிவர்களும், கணங்களும் பெருமானை வழிபட அணியணியாகவந்து காலங்கருதி நிற்பர்; துதித்து அருள் பெறுவர்.

அத் திருக்கைலாய மலையின் அடிவாரத்தில், பத்தராய முனிவர் பல்லாயிரவரும் சுத்த யோகிகளும் சூழ உபமன்னிய முனிவர் இருப்பார். அவர் பரமேசுரன் தர பாற்கடலுண்டவர்; கண்ணபிரானைத் திருவடி தீட்சை தந்து உபதேசித்து உய்வித்தவர். அளவற்ற மகிமையும், திருத்தொண்டும் பெற்றவர்.

**யாதவன் துவரைக் கிறை யாகிய**
**மாதவன் முடி மேலடி வைத்தவன்**
**பூத நாதன் பொருவருந் தொண்டினுக்**
**காதி யந்த மிலாமை யடைந்தவன்.**

இத்தகைய உபமன்னியமுனிவர், முனிகணஞ் சூழ சிவபெருமானுடைய திருவருட் பெருமையைக் கூறிக்கொண்டிருந்த போது, ஆங்கு ஆயிரஞ் சூரியருடைய ஒளிபோல ஒரு பேரொளி தோன்றியது. அதனைக் கண்ட அருந்தவமுனிவர்கள், "இது என்ன அதிசயம்" என்றார்கள். உபமன்னியர் சிவபெருமானைச் சிந்தித்து, ஆலாலசுந்தரர் திருக்கைலாய மலையினின்றும் அரனார் ஆணையால் நீங்கி மண்ணுலகம் வாழ தென்திசையில்

திருவவதாரஞ் செய்து, மீட்டும் கயிலைக்கு எழுந்தருளிவருகின்றனர் என்பதனை யுணர்ந்து, எழுந்து சிரமீது கரமலர் கூப்பி கண்ணருவி பாயத் தொழுது அதனை நோக்கி நடந்தனர். அருகிருந்த முனிவர்கள், "ஐயனே! அரனுரையன்றி மறந்தும் புறந் தொழாத தேவரீர் இந்த இவ்வாறு இறைஞ்சியது என்ன?" என்று கேட்டனர். அவ்வண்ணம் ஆர்வத்துடன் கேட்ட அருந்தவர்கட்கு உபமன்ய முனிவர் கூறுவாராயினர்.

சிவபெருமான் ஒருசமயம் தமக்கு நேராக அமைந்திருந்த சுத்த வித்தியா மயமான நிலைக்கண்ணுடியில் தோன்றும் தமது சுந்தரசாயா வடிவை "சுந்தரா வருக" என்று அழைத்தருளினுர். அக் கண்ணுடியினின்று சுத்த வித்யாமய சிவரூபம் மூன்று கண்களும் நான்கு தோள்களும் பிறைமுடியுமாக வெளிப்பட்டு சிவபெருமானை வணங்கியது. மற்றைய உருத்திரர்களினும் சிறந்த அவ்வுருத்திரர் சுந்தரர் என்னுந் திருநாமத்துடன், கோடிசூரியப் பிரகாசத்துடன் திருமலர் எடுத்து திருமாலை தொடுத்து சூட்டுதலும், திருநீற்றுப்பாத்திரந் தாங்கி பெருமான் அருகே நிற்றலுமாகிய திருவணுக்கத் தொண்டு புரிந்துகொண்டிருந்தனர்.

அவ்வண்ணமே உமையம்மையார் அக் கண்ணுடியில் தமது திருவுருவ சாயையை அழைக்க அது இரண்டு திருவுருவங்களாக வெளிப்பட்டன. அனிந்திதை, கமலினி என்னும் அவ்விரு அழகின் கொழுந்துகள் போன்ற சத்திகள் அம்மைக்கு ஏவல் புரிந்துகொண்டிருந்தனர்.

மாலயனுதி வானவர் யாவரும் அமிர்தம் வேண்டி திருப்பாற்கடலைக் கடையத் தொடங்கினர். கணபதியை வணங்காத காரணத்தால் ஆலாலவிடந் தோன்றியது. அதன் வெம்மையைத் தாங்காத விட்டுணுமூர்த்தி முதலிய விண்ணவர் அனைவரும் அஞ்சி, வெள்ளிமலைக்குவந்து "எம்பெருமானே! தேவரீரே முழுமுதற் பெருந்தலைவர். அடியேங்கள் செய்த முயற்சியால் முதலில் விளைந்தது உமக்கே உரியது. நஞ்சினுல் அஞ்சினேம். ஆண்டருளும்" என்று வேண்டினர். முக்கட் பெருமான் அவர்களை "அஞ்சன்மின்" என்று அருள்புரிந்து, திருநீற்றுக் கோயிலை யேந்தி அருகே நிற்கும் சுந்தரரை நோக்கி "சுந்தரா! அவ் விடத்தை இவ்விடத்திற்குக் கொணர்தி" என்று பணித்தருளினர். சுந்தரர் சென்று யாராலும் அணுக முடியாத பெரும் வெப்பத்தைத் தரும் ஆலாலவிடத்தைத் தமது ஒருகரத்



தால் எடுத்து நாவற்பழம்போல் திரட்டிக் கொணர்ந்து கண்ணுதற்பெருமானிடந் தந்தனர். அதனைச் சிவபிரான் உள்ளும் புறமும் உள்ள உயிர்களெல்லாம் உய்ய கண்டத்தில் தரித்து நீலகண்டராக விளங்கினுர். அதனுல் சுந்தரர் "ஆலால சுந்தரர்" என்னுஞ் சிறப்புப் பெயர் எய்தினுர்.

சிவபெருமான் தமிழுலகமுய்ய வேதாகமங்களின் சாரங்களைத் திரட்டி தமிழ் வேதமாக இச் சுந்தரரைக் கொண்டு பாடுவிக்கவும் திருத்தொண்டத்தொகையை வெளிப்படுத்தவும் திருவுளங் கொண்டருளினுர். அதற் குரியவர் ஆலால சுந்தரரே எனவுங் கருதினுர். கைலையினின்றே பாடுவித்தால் மண்ணுலக முணராதெனவும், ஆன்மாக்கள் பக்குவப்பட்டு உய்வு பெறவேண்டு மெனவுந் திருவுளத்து எண்ணினர். காரணமின்றி மண்ணுலகிற்கு சுந்தரரை அனுப்புதல் முறைமையன்று எனவும் கருதினுர். ஒரு சமயம் ஆலால சுந்தரர் திருநந்தன வனம்போய் மலர் பறிக்கும்போது அம்பிகையின் சேடியராகிய அனிந்திதை கமலினி என்னும் இருவரும் ஆங்கு வந்து மலர் பறித்தனர். சிவபெருமான் திருவருள் ஏவ, சுந்தரருடைய கண்ணுங்கருத்தும் அம் மங்கையர் பால் சென்றன. காமதகனம் நிகழ்ந்த இடமாகிய கைலையில் காமாதி குற்றங்கள் நிகழ இடமே இல்லை. பரமேசுரனுடைய திருவருள் அங்ஙனந் தூண்டியது. அந்நங்கையரும் இவரை நோக்கினர். பின்னர் கருத்தைத் திருத்திக் கொண்டு சுந்தரர் திருமாலை தொடுத்து கருமாலையகற்றுங் கண்ணுதற் பெருமானிடம் எய்தினர். அங்ஙிங்கெனுதபடி எங்கும் பரிபூரணமாய் நிறைந்துள்ள நிமலன் "சுந்தரா! நீ மாதர்மேல் மனம் வைத்தனை; ஆதலின் பூதலத்திற் பிறந்து, அவருடன் காதலின் கலந்தணைவாய்" என்று கட்டளையிட்டருளினுர்.

(அன்பர்கள் இங்கே சிந்திக்கத்தக்கவைசிலவுள; சுந்தரரை பெருமான் மாதர்மேல் மனம் வைத்ததற்கு சபித்தாரில்லை; "வேண்டுவார்வேண்டுவதேயீவான் கண்டாய்" என்றபடி எண்ணத்தை முற்றுவிப்பான் அருள்புரிந்தனர். அன்றியும் எண்ணங்கட்கு பிறப்பு உண்டு என்பதையும், அவாவே பிறப்புக்கு வித்து என்பதையும் உணர்த்தியருளினுர். மாதர்மீது பார்வையைச் செலுத்திய ஆலாலசுந்தரர் அந்த உலகத்தைத் துறந்து இந்த உலகத்திற்கு வந்தார் என்றுல் இந்த உலகத்திலிருந்து கொண்டு பார்வை பாவையர் மேல் முறை யின்றி செல்லுமாயின் எந்த வுலகத்திற்குப் போவது? என்பதனையும் ஈண்டு சிந்தித்து உய்வுபெறவேண்டும். எல்லாப் புலன்களிலும் சிறந்

தது கட்புலன் என்பதும், அக்கட்புலன் தூய்மையாக இருத்தல் வேண்டும் என்பதும் அன்பர்கள் அறிந்து கொள்ளுதல் வேண்டும். மறந்தும் பார்வை நெறிதவறி நடக்கக் கூடாது.)

**ஆதி மூர்த்தி அவன்திறம் நோக்கியே**
**மாதர் மேல்மனம் வைத்தனை தென்புவி**
**மீது தோன்றியம் மெல்லிய லாருடன்**
**காத லின்பங் கலந்தணை வாயென.**

அதுகேட்ட ஆலாலசுந்தரர் அஞ்சி ஐயன் அடிமலர் மீது விழுந்து தொழுது அழுது, என்னை யாளுடை யீசனே! நின் திருவடியை நீங்குஞ் சிறியேன் உலகில் மானுடனாய் மையல் பூண்டு மயங்கும்போது தடுத்தாட்கொள்ளும் என்று வேண்டினார்.

**கைகள் அஞ்சலி கூப்பிக் கலங்கினன்**
**செய்ய சேவடி நீங்குஞ் சிறுமையேன்**
**மையன் மாநுட மாய்மயங்கும் வழி**
**ஐயனே தடுத் தாண்டருள் செய்யென.**

திங்களை முடித்த எங்கள் நாயகர் "அங்ஙனமேயாகுக; நின்னை மாயை தொடரலுற்றபோது தடுத்தாட்கொள்வோம்" என்று திருவருள் புரிந்தனர். அதன்பின் அம்மூவர்களும் மண்ணுலகில் தென்திசையில் வந்து அவதரிப்பாராயினார்கள். இவ்வாறு உபமன்னியர் கூற, முனிவர்கள் தொழுது, "தபோதனரே! எட்டுத்திசையினும் தென்திசை சிறந்தது என்பதற்கு என்ன காரணம்?" என்று வினவினார்கள். உபமன்னியர் "முனிவர்களே! கூறுதும். எத்திசையினும் சிறந்தது தென் திசை. எனது தந்தையாராகிய வியாக்கிரபாதனார் நெடிது காலம் பெருந்தவம் புரிந்து திரு நடனங் கண்ட பொன்னம்பல முள்ளது இத்திசையிலேயாம். ஐம்பூதத் திருத்தலங்களும், 1008 சிவமூர்த்தங்களும் உள்ளதும் அத் திசையிலேயாம். பூமியின் இதய கமலமாகிய திருவாரூரும் அங்கு விளங்குகின்றது. உலகெலாமீன்ற உமையம்மையார் கம்பையாற்றில் மா வடியில் வழிபட்ட கச்சியம்பதியும், நந்திதேவர் தவமியற்றிய திருவையாறும், மண்ணும் விண்ணும் அழியும் உகாந்த காலத்தும் அழியாது மிதக்குந் திருத்தோணிபுரமும், பிறவும் திகழ்வதும் அத் திசையிலேயாகும். ஆதலினால் பூதலத்தில் தென்திசை சிறந்த புண்ணிய திசையாகும். இனி திருத்தொண்டத்தொகை தோன்றிய திருவாரூரின் பெருமையைச் சிறிது கூறுதும். கேண்மின்கள்" என்று கூறலுற்றனர். (தொடரும்)

